விரதத்தோடிருப்பதனால் [1]கூடலிங்கரென்று சொல்லப்படுகிறார். அவருடைய லிங்கத்தை உலகம் பூஜிக்கிறது. அந்தமகாத்மாவுக்கு அந்தலிங்கம் பிரியமானது. அந்தமகாத்மாவினுடையவிக்ரகத்தைப் பூஜிப்பவன் லிங்கத்தையும் பூஜிக்கவேண்டும். நாள்தோறும் லிங்கத்தைப்பூஜிப்பவன் பெரியஐஸ்வர்யத்தையடைவான். ரிஷிகளும் தேவர்களும் கந்தர்வர்களும் அப்ஸரஸுகளும் மேனோக்கியிருக்கும் அந்த லிங்கத்தையே பூஜிக்கின்றனர். லிங்கத்தைப்பூஜித்தால் மகேஸ்வரர் ஸந்தோஷமடைகிறார். பக்தர்களிடத்தில் அன்புள்ளசங்கரர் ஸந்தோஷமடைந்து பக்தர்களுக்கு ஸுகத்தைக் கொடுக்கிறார். இவர்தாம் மயானங்களில் எரித்துக்கொண்டிருப்பவர். வீரஸ்தானமென்னப் படும்வீரலோகத்தைவிரும்புகிறஜனங்கள் அவரை அங்கே பூஜிக்கின்றனர்.இவ்வுலகத்தில் பிராணிகளின்தேகங்களில் அவரே மரணகாலத்தில் மிருத்யுவாயிருக்கிறார்.பிராணிகளின் உயிரைக்காப்பாற்றும் பிராணவாயுவாகத் தேகங்களில் இருப்பவரும் அவரே. அவருடைய உக்ரமாகஜ்வலிக்கும்பலஉருவங்கள் உலகத்தில்பூஜிக்கப்படுகின்றன.அவற்றையறிகின்றவர்கள் வித்வான்களானபிராம்மணர்கள். அவருடைய நாமகங்களநேகங்கள் வேதங்களிலிருக்கின்றன. அவருடைய மகிமையினாலும் சக்தியினாலும் செய்கைகளாலும் அந்நாமங்கள் அர்த்தமுள்ளவைகளாகப் பகுத்துரைக்கப்படுகின்றன.வேதத்தில் அவரைப் பற்றியஉத்தமமானசதருத்ரீயத்தைப் பிராம்மணர்கள் அறிகின்றனர். அம்மகாத்மாவைப் பூஜிக்கும்வகையும்வ்யாஸரால்சொல்லப்பட்டிருக்கிறது. அவர் எல்லாஉலகங்களுக்கும் வேண்டினவற்றைக்கொடுப்பவர்; எல்லாவற்றிற்கும் ஸாக்ஷி; குறைவில்லாதவர்.பிராம்மணர்களும் ரிஷிகளும் மற்றவர்களும் அவரை ஜ்யேஷ்டரென்று சொல்லுகின்றனர். அவர் தேவர்களுக்குமுதல்வர். அவர் தம்முகத்திலிருந்து அக்நியையுண்டாக்கினார். அவரே அனேகப்ராணாயாமங்களினால் மூச்சை அடக்கிவிடுகிறார். ரக்ஷிப்பதில்ஸமர்த்தராகிய அவர் மகிழ்ந்து அனுக்ரஹம்வைத்துச் சரணாகதர்களுக்கு முக்தியளிக்கிறார். மனிதர்களுக்கு ஆயுளையும் ஆரோக்யத்தையும் ஐஸ்வர்யத்தையும் ஸுகத்தையும் நிரம்பினபோகங்களையும் கொடுப்பவரும் திரும்பியெடுப்பவரும் அவரே. அவருடையஐஸ்வர்யந்தான் இந்திராதிதேவர்களிடத்திலும் இருப்பதாகச் சொல்லப்படுகிறது. மூவுலகங்களுக்கும் நன்மைதீமைகளின் பலன்களைக்கொடுப்பவர் அவரே. வேண்டினவற்றையெல்லாம் பெறும்சக்தியிருப்பதனால் ஈஸ்வரரென்று சொல்லப்படுகிறார். பெரிய

[1] மறைவானலிங்கமுள்ளவர்.

உலகங்களுக்குஈஸ்வரராயிருப்பதனுல் மஹேஸ்வரரென்றுசொல்லப்படுகிறுர். அவருடையபலவகையானரூபங்களாலேயே இவ்வுலகமனைத்தும் வியாபிக்கப்பட்டிருக்கிறது. கடலிலுள்ளவடவாமுகாக்கினியும் அந்தஈஸ்வரராதுவாய்தான்" என்றுர்.

---

## இருநூற்றுறுபத்தேழாவது அத்யாயம்.

## தானதர்மபர்வம். (தொடர்ச்சி.)



(பீஷ்மர் தர்மத்தைப்பற்றி ஸந்தேகம் வந்தால் நிச்சயிக்கும் வகையைத் தர்மபுத்ரநுக்கு உரைத்தது.)

தேவகீபுத்ரரானகிருஷ்ணபகவான் இந்தச் சொல்லை இவ்வாறுசொன்னபிறகு, யுதிஷ்டிரர் சந்தனுபுத்திரரான பீஷ்மரை நோக்கி, "ஓ! சிறந்த புத்தியுள்ளவரே! தாமங்தெரிந்தவர்களிலெல்லாம் சிறந்தவரே! ஒன்றைநிச்சயிப்பதற்குப் பிரத்யக்ஷம் சாஸ்திரம் இவ்விரண்டினுள் எது ஸரியானபிரமாணமாகும்?" என்று திரும்பவும் கேட்க, பீஷ்மர் சொல்லலானுர்.

"சிறந்த புத்தியுள்ளவனே! நீ நன்றுகக் கேட்கிறுய். இதுவிஷயத்தில் ஸந்தேகமொன்றுமில்லையென்று எனக்கு அபிப்பிராயமிருக்கிறது. அதை உனக்குச் சொல்வேன்; கேள். இந்த விஷயத்தில் ஸந்தேகமுண்டாவது எளிது; நிச்சயம்வருவது கடினம். பார்ப்பதற்கும் கேட்பதற்கும் முடிவில்லை. அதனுல், ஸந்தேகமுண்டாகிறது. ப்ரத்யக்ஷம் பிரமாணமாக யாவராலும் காணப்படுகிறது. பண்டிதனுக நினைத்திருப்பவனுக்கு யுக்திவாதம் பிரமாணமாகிறது. அவர்கள் ஸத்யவாக்யத்தையும் சாஸ்திரத்தையும் இல்லாதவையாக நிச்சயிக்கின்றனர். அவர்கள் நினைப்பது பிழை. அவர் தங்களைப் பண்டிதராக நினைத்திருக்கும் அறிவீனர். எதையும், 'இது ஸரியானபிரமாணமாகுமா' என்று ஆராய்ந்து பார்க்கவேண்டுவதுதான். உலகவாழ்க்கையை நடத்தும் மனிதன் யுக்திகளாலும் சாஸ்திரவிசாரணைகளாலும் நீண்டகாலத்தினுல் நிச்சயிக்கமுடியும். ஒரு விஷயத்திலேயே ஊக்கம் வைத்தாலன்றி அந்தப்பிரமாணத்தை நிச்சயிக்க முடியாது. ஹேதுவாதங்களை நிறுத்தினபிறகுதான் எல்லா உலகங்களுக்கும் ஒளியாயிருக்கும் சிறந்த பேரறிவைத் தடையின்றி அறியலாம். வேந்தனே! யுக்திகளைக்கொண்டு அறிவது சரியான அறிவன்று. நம்பத்தகாததும் முடிவில்லாததுமான யுக்திவாதத்தை வாக்கினுல் சொல்லாமல் விடவேண்டும்" என்றுர்.